இதழ் 01 தை- மாசி 2019
மலர் 18

For light the world..

# அக்கினிக்குஞ்சு




## நம்மை அபிஷேகம் பண்ணினவர் தேவனே!

(2கொரி 1:21)



# போதகரின் மேசையில் இருந்து

## எழுதுவது என்னவென்றால்......

அன்பின் சொந்தங்களுக்கு, புத்தாண்டு வாழ்த் துக்கள்.

பிறந்திருக்கும் இந்தப் புத்தாண்டு உங்களுக்கு ஆரோக்கியத்தையும், செல்வத்தையும் மாத்திரம ல்ல, சமாதானத்தையும், சந்தோஷத்தையும் அளவில்லாமல் தந்தருளுவாராக.

2019ம் ஆண்டில் செய்யப்பட வேண்டிய பணி க்காக உதவி செய்யுங்கள். உங்கள் பங்களிப்பு இந்த ஊழியத்தையும், எங்கள் ஊழியப்பங்கா ளரையும் இன்னும் ஒருபடி உற்சாகத்தோடு ஓட வைக்கும்.

அக்கினிக்குஞ்சு என்னும் இந்தச் சிறு சஞ்சிகை உங்களுக்கு ஆசீர்வாதமாக இருக்குமானால் எங்களுக்கு எழுதுங்கள். அது இன்னும் எங் களை உற்சாகப்படுத்தும். குறிப்பாக இந்தச் சஞ்சிகை எந்த லாபநோக்கமில்லாமல் அச்சடி த்து தரும் பிறிண்ட் மீ நிறுவனர் சகோ. நிக்சன் அவர்களுக்கு நாங்கள் மனமார்ந்த நன்றி சொல் லுகின்றோம். அவரையும், அவர் குடும்பத்தின ரையும் தேவன் அளவில்லாமல் ஆசீர்வதிப்பா ராக!

எமது ஆலய ஆராதனையொன்றில் பங்குபற்ற உங்களை அன்புடன் அழைக்கின்றோம். இந்தச் சஞ்சிகையில் பல இடங்களில் எங்கள் முகவரி பதிவு செய்யப்பட்டிருக்கின்றது. நாங்கள் சத்தி யத்தைக் கலப்பில்லாமலும், சுத்த இருதயத்து டனும் பிரசங்கித்து வருகின்றோம். எங்கள் ஞாயிறு ஆராதனையொன்றில் கலந்து கொள் ளுங்கள்.

இது எங்கள் ஊழியத்தின் 27ம் ஆண்டு. இத்தனை காலம் நடத்தியவர் இந்த ஆண்டை யும் நன்றாகவே நடத்துவார்....ஆமென்


Our address:
Pastor Mano Tharmalingam
Praise Tabernacle
5155, Spectrum way, unit 7
Mississauga ON
L4W 5A1 - Canada (416) 554 8448


உன் நம்பிக்கை வீண்போகாது.




மீட்பர் இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் புத்தாண்டு வாழ்த்துக்கள். இந்த 2019ம் ஆண்டிலும் சுக, பெலத்தோடு உங்களைச் இந்த இதழ் மூலம் சந்திப்பதில் மிக்க மகிழ்ச்சி. உங்களை உள்ளத்தின் ஆழத்தில் இருந்து சத்திய வேதவாக்குக் கொண்டு இஸ்ரவேலே நீ பாக்கியவான் என்று ஆசீர்வதிக்கின்றேன்.

நம்மை பாக்கியவான்களாக்கவே இயேசு பாரமான சிலுவையைச் சுமந்தார். அவர் வாதிக்கப்பட்டு, நிந்திக்கப்பட்டு, அடிக்கப்பட்டதினாலேயே நமக்கு பாக்கியம் வந்து சேருகின்றது.

இந்த உலகத்தில் பாக்கியவான் என்ற வார்த்தையை நாம் உபயோகிக்கும்போது பாக்கியவான் என்றால் யார் என்றொரு கேள்வியும் நமக்குள்ளே எழும்புகின்றது. பணம் படைத்தவரை பாக்கியவான் என்கிறார்கள், தேக ஆரோக்கியத்தோடு திடமாய் இருப்பவர்களை பாக்கியவான் என்கிறார்கள். சந்தோஷமான குடும்பத்தை பார்த்து பாக்கிவான் என்கிறார்கள். இவைகள் எல்லாமே உலகப் பிரகாரம் பாக்கியவான்களைப் போல இருந்தாலும் இவை நிரந்தரமானவைகள் அல்ல. இந்த ஆசீர்வாதங்கள் எல்லாம் காற்றில் கரைந்து விடும் தன்மை கொண்டவை. உண்மையான பாக்கியவான் யார் என்பதை வேதம் நமக்குச் சொல்லுகின்றது. அதில் நான்கு பாக்கியவான்களைக் குறித்து நான் உங்ளோடு தியானம் பண்ண விரும்புகின்றேன்.

**1. கர்த்தருடைய வேதத்தை அனுதினமும் தியானம் பண்ணுகிற மனுசன் பாக்கியவான்.**

(சங் 1:2) கர்த்தருடைய வேதத்தில் பிரியமாயிருந்து, இரவும் பகலும் அவருடைய வேதத்தில் தியானமாயிருக்கிற மனுசன் பாக்கியவான்.

கர்த்தருடைய வேதமே சத்தியம். அதனைத் தியானிக்கத் தியானிக்க கர்த்தர் உங்கள் வழிகளை செவ்வைப்படுத்துவார். நீங்கள் போகின்ற பாதைகளையும், வழிகளையும் அவரே முன்சென்று நேராக்குவார். ஆகையினால் அவருடைய வார்த்தையை அறிந்து கொள்ளல் மிகமுக்கியம். அது நாம் செய்யும் தொழிலானாலும், ஊழியமானாலும், நம்முடைய தனிப்பட்ட வாழ்வின் நிகழ்வானாலும் தேவனின் வழிநடத்தலை உணர்ந்து கொள்ள வார்த்தையை அறிந்து கொள்ளல் மிக முக்கியம். ஆகையினால் தான் யோசுவா 1ம் அதி 8ம் வசனத்தில் தேவனுடைய வார்த்தை இவ்வாறு சொல்லுகின்றது " **இந்த நியாயப்பிரமாண புஸ்தகம் உன் வாயைவிட்டுப் பிரியாதிருப்பதாக, இதில் எழுதியிருக்கிறவைகளின்படியெல்லாம் நீ செய்யக் கவனமாயிருக்கும்படி, இரவும் பகலும் அதைத் தியானித்துக் கொண்டிருப்பாயாக, அப்பொழுது நீ உன் வழியை வாய்க்கப்பண்ணுவாய், அப்பொழுது புத்திமானாயும் நடந்துகொள்ளுவாய்**".

**2. மீறுதல்களும், பாவங்களும் மன்னிக்கப்பட்ட மனிதன் பாக்கியவான்.**

*(சங் 32:1)* எவனுடைய மீறுதல் மன்னிக்கப்பட்டதோ, எவனுடைய பாவம் மூடப்பட்டதோ, அவன் பாக்கியவான்.

பாவமும், மீறுதல்களும் உன் தூக்கத்தையும், நிம்மதியையும் கெடுக்கும் மிகப்பெரிய ஆயுதம். ஒரு மனிதனுடைய ஆத்துமாவில் காணப்படும் குழப்பத்தின் வெளிப்பாடு தான் அவன் சரீரத்தில் காணப்படும் வியாதி. **பாவத்தின் பலன் நரகம்** என்பதே வேதம் நமக்குத் தரும் வெளிச்சம். இளவயதில் நடந்த மீறுதல்களும், வாலவயதின் தவறுகளும், தற்போதைய பாவ வாழ்க்கையும் நமது நித்திய வாழ்வைக் குலைத்து நிற்கும் கொடுமையான ஆயுதங்கள் ஆகும். இவைகள் நம்மை நித்திய நரகத்திற்கு நேராக நடத்த வல்லவையாகும். இவைகள் யாவும் நம்முடைய ஞாபகத்தில் இருந்து மன்னிப்பு என்ற பெறுமானம் மிக்க நம்பிக்கையினால் மீட்கப்படவேண்டுமனால் அதற்கு ஒரே வழி கிறிஸ்து இயேசுவின் இரத்தமாகும். **நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார் (1யோவான் 1:9)** என்ற வசனத்திற்கு உங்களை ஒப்புக் கொடுப்பீர்களா?

**3. தேவன் தண்டிக்கிற மனசன் பாக்கியவான்:**
(யோபு 5:17) இதோ, தேவன் தண்டிக்கிற மனுசன் பாக்கியவான். ஆகையால் சர்வவல்லவருடைய சிட்சையை அற்பமாக எண்ணாதிரும்.
தன் மக்கள் நன்மக்களாக வளரவேண்டும் என்னும் அக்கறையுள்ள எந்தத் தகப்பனும் தன் பிள்ளையை தண்டித்து வளர்க்கின்றான். தண்டனைப் பிரம்பு பிள்ளையின் நெஞ்சில் ஒட்டியிருக்கும் மதியீனத்தைப் போக்கும். தன் பிள்ளைத் தண்டிக்கத் தவறினவன் அவனை நித்திய நரகத்திற்கு நேராய் நடத்துகின்றான். உலத்தகப்பன்கள் நம்மை இவ்வாறு அக்கறையோடு நடத்துவார்களானால் பரம பிதா நம்மை எவ்வாறு அக்கறையோடு கவனித்துக் கொள்வார். **எல்லாருக்கும் கிடைக்கும் சிட்சை உங்களுக்குக் கிடையாதிருந்தால் நீங்கள் புத்திரராயிராமல் வேசிப்பிள்ளைகளாயிருப்பீர்களே** என்று எபி 12:8ல் வாசிக்கின்றோம்.ஆகையால் தேவனுடைய தண்டனைப் பிரம்பு நம்மேல் வரும்போது அதனை ஏற்று செய்த தவற்றைத் திருத்தி தன்னை தேவனுக்கு நேராக ஒப்புக் கொடுக்கும் மனிதன் பாக்கியவான்.
**4. சிறுமைப்பட்டவனுக்கு உதவி செய்கிறவன் பாக்கியவான்:**
(சங் 41:1) சிறுமைப்பட்டவன்மேல் சிந்தையுள்ளவன் பாக்கியவான், தீங்குநாளில் கர்த்தர் அவனை விடுவிப்பார்.
சுயநலமற்றவர்கள் தேவராஜ்ஜியத்தைச் சுதந்தரிப்பதில்லை. தனக்கென்று சேர்த்து வைக்காமல் தேவராஜ்ஜியத்தின் மக்களின் தரித்திரத்தை விசாரியுங்கள். தேவன் உங்கள் பிள்ளைகளை விசாரிப்பார். **அவர் திக்கற்ற பிள்ளைக்கும் விதவைக்கும் நியாயஞ் செய்கிறவரும், அந்நியன்மேல் அன்புவைத்து அவனுக்கு அன்னவஸ்திரம் கொடுக்கிறவருமாய் இருக்கிறார்** என்று உபகா 10:18ல் வேதம் சொல்லுகின்றது. பாக்கியவான்களாய் மாற வேண்டுமா?. உங்கள் கரங்கள் நலிந்தவர்களையும், நொந்தவர்களையும் நோக்கியிருக்கட்டும். அவர்கள்படும் உபத்திரவத்திலும், வேதனையும் உங்களால் முடிந்தளவு உதவி செய்யுங்கள். அவை பரலோகத்தில் உங்கள் கணக்கில் வைக்கப்படும். சுயநல ஆவியை வெளியனுப்புங்கள், மெய்யான கிறிஸ்துவின் அன்பிலும் , அவரின் உபதேசத்திரும் நிலைத்திருந்து, அதன்படி செய்வீர்களானால் நீங்களே பாக்கிவான்கள்.
**நீதி-28:27 தரித்திரருக்குக் கொடுப்பவன் தாழ்ச்சியடையான்.**

போதகர் மனோ தர்மலிங்கம்.

**1st Day of the month @ 5:00 - 6:00 AM**

**COMMUNION SERVICE**




2nd Saturday of
every month..
At 10:00 AM- 12:00 PM

Women's
*Ministries*



**JOIN US FOR**

**SUNDAY SCHOOL**

**Excellent Experienced Teachers are in the ministry**

**EACH WEEK AT 9:30AM**

1st Saturday of the month @ 9:30AM

# PRAYER AND FASTING

Come, joint with us to reach the nation......

# FRIDAY NIGHT PRAYER

3rd Friday of the month at 10:00 PM - 12:30 AM

Bible study.

நீரே என் நம்பிக்கை

Praise Tabernacle
5155, Spectrum way
Unit #7
Mississauga ON

சங் 39: 7

பிரதி வியாழக்கிழமை தோறும் மாலை 7:30 மணி

# கிறிஸ்துவினுடைய மணவாட்டியின் ஏழு குணாதிசயங்கள்!

எழுதியவர் : சகரியா பூணன்

மணவாளன் ஞானம் என அழைக்கப்பட்டதை நீதிமொழிகள் 8:1,27-ம் வசனங்களில் வாசிக்கிறோம். அதுபோலவே மணவாட்டியும் கூட ஞானம் என்றே அழைக்கப்படுவதை நீதிமொழிகள் 9:1-ம் வசனத்தில் வாசிக்கிறோம். ஏனெனில் இந்த மணவாட்டி எல்லாவகையிலும் தன் மணவாளனுக்கு ஒப்பாகவேஇருந்து, அவருடைய ஞானம் என்ற நாமத்தைத் (பெயரை) தன் நெற்றியில் தரித்து கொண்டவளாய் இருந்தாள். மேலும், தன் மணவாளனைப்போலவே ஜெயம் பெற்றவளாயும் இருந்தாள் ( வெளி 3:12, 21 ரு வெளி 14:1 ). இந்த மணவாட்டிக்கும், வேசிக்கும் உள்ள வித்தியாசத்தை நீதிமொழிகள் 9-ம் அதிகாரம் தெளிவாய் வேறுபடுத்திக் காட்டுகிறது. இந்த அதிகாரத்தின் முதல் 12 வசனங்களில் மணவாட்டி எல்லா புத்தியீனர்களையும் அவர்களின் புத்தியீன வழிகளை விட்டு விலகும்படியும், அவர்களின் பாவமுள்ள சம்பாஷனையை விட்டு விலகும்படியும் அழைத்து (வசனம் 6), ஞானத்தின் ஆரம்பமாகிய 'கர்த்தருக்குப் பயப்படுவதைக்' கற்றுக்கொள்ளும்படியும் அழைப்பதை நாம் காண்கிறோம் (வசனம் 10). அதேபோல், இந்த அதிகாரத்தின் கடைசி 6 வசனங்களில் வேசியின் அழைப்பையும் நாம் காண்கிறோம்! இந்த வேசியின் அழைப்பிற்கே ஏராளமான பேர் செவிகொடுத்து ஆவிக்குரிய நரகபாதாளத்தில் வீழ்ந்தார்கள் என்றும் 18-ம் வசனம் எடுத்துக்கூறுகிறது. மணவாட்டியானவள் (ஞானம்), ஏழு தூண்களின் மீது தன் வீட்டை கட்டுகிறாள் என்று அங்கே வாசிக்கிறோம் (வசனம் 1). நீதிமொழிகள் புத்தகம் எடுத்துரைக்கும் ஞானத்தின் ஏழு தூண்களை யாக்கோபு 3:17-ம் வசனம் நேர்த்தியாய் வரிசைப்படுத்தி கூறுவதைப் பாருங்கள்! எந்த ஒரு மெய்யான சபையும் இந்த ஏழு தூண்களின் மீதே கட்டப்பட வேண்டும்!! இங்கு விவரிக்கப்படும் ஞானத்தின் குணாதிசயங்களை உற்றுநோக்கி யார் கிறிஸ்துவின் மணவாட்டி? என்பதை எளிதில் கண்டுபிடித்திடவும் முடியும்!!

**1. பரிசுத்தம்:** மெய்யான சபைக்கு, கிறிஸ்துவின் மணவாட்டிக்கு மிக முக்கியமான முதல் தூணாய் காணப்படவேண்டியது இந்த பரிசுத்தமேயாகும்! வெளிப்புற பரிசுத்தத்தை மாத்திரம் காட்டி, உள்ளே வெற்று கூடாய் காணப்படும் தூணல்ல இந்த பரிசுத்தம்! அப்படி இல்லவே இல்லை!! மாறாக, தூணின் உச்சி தொடங்கி அதன் அடிப்பாகம் வரை உறுதியான கெட்டியான

தூணாய் விளங்குவதே இந்த பரிசுத்தம். இந்த மெய் பரிசுத்தம் இருதயத்தின் பரிசுத்தம்ஆகும். தெய்வ பயத்தின் விதை ஆழமாய் இருதயத்தில் விழுந்து வளர்ந்ததே இந்த பரிசுத்தமாகும். ஆம், புத்திசாலியான மூளை அறிவு கொண்டவர்களை வைத்து அல்ல, சுத்த இருதயம் கொண்டவர்களை வைத்தே கிறிஸ்துவின் மெய்யான சபை கட்டப்படுகிறது! தேவாதி தேவனைக் குறித்தும், அவருடைய வழிகளைக் குறித்தும் ஆவிக்குரிய வெளிப்பாடு இல்லையென்றால், நாம் ஒருக்காலும் சபையைக் கட்டிட முடியாது! இந்த வெளிப்பாடுகளை யாருக்கு தேவன் தருகிறார்? தங்கள் இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் மாத்திரமே தேவனை தரிசிக்கும் வெளிப்பாடு பெறுவார்கள் என மத்தேயு 5:8-ம் வசனம் முரசொலிப்பதைப் பாருங்கள்!!

**2. சமாதானம்:** நீதியும் சமாதானமும் எப்போதும் இணைந்தே செல்கிறது! ஆம், இவர்கள் இரட்டையர்கள்!! தேவனுடைய ராஜ்யம், நீதியும் சமாதானமுமாம்!! ( ரோமர் 14:17) . மெய்யான ஞானம் ஒருபோதும் வாக்குவாதம் கொண்டதும், சச்சரவுபண்ணுவதுமாய் இருப்பதே இல்லை! அது சண்டையிடுவதற்கு முன்செல்லாது! தன்னால் முடிந்த வரை யாவரோடும் ரம்மியமான உறவையே நாடும்! ஒருவன் திவ்விய ஞானத்தினால் நிறைந்திருந்தால், அதுபோன்றவனிடம் சச்சரவைத் தூண்டிவிட யாராலும் முடியாது!! ஏனென்றால், அந்த மனிதன் சமாதான புருஷன்!! அவன் உறுதி கொண்டவனாய் இருக்கலாம்! ஒத்த வேஷக்காரர்களால் வெறுக்கவும்படலாம்! ஆனால் அவனோ, எப்போதும் சமாதான புருஷன்! சுவிசேஷத்தைப் பிரசங்கித்திட தன் சீஷர்கள் செல்லும்போது சமாதான புருஷர்கள் இருக்கும் வீட்டில் மாத்திரமே தங்கும்படி இயேசு அவர்களிடம் கூறினார் ( லூக்கா 10:5-7) . தேவனுடைய வீட்டை நாம் கட்டுவதாயிருந்தால், நாம் கண்டிப்பாய் சமாதான புருஷர்களாகவே இருந்திட வேண்டும்!

**3. சாந்தம்:** கிறிஸ்துவின் மணவாட்டி மற்றவர்களிடம் எப்போதுமே நல்லவர்களாயும், மென்மையுள்ளவர்களாயும், பொறுமையுள்ளவர்களாயும், சகித்துக்கொள்பவர்களாயும், மரியாதை காண்பிக்கும் குணம் கொண்டவர்களாயும் இருப்பார்கள்! கடினமாகவோ அல்லது கரடு முரடாகவோ ஒருபோதும் நடந்து கொள்ளாமல், பிறருடைய உணர்வுகளை மதித்து நடப்பார்கள்! இந்த தூணை சபை பெற்றிருந்தால் மாத்திரமே, சபை மக்களில் சிலர் மந்தமுள்ளவர்களாய் இருந்தாலும், கரடு முரடான நாகரீகமுள்ளவர்களாய் இருந்தாலும், அவர்களைத் தாங்கிக்கொள்வது எளிதாய் இருக்கும்! பிரச்சனை நம் சகோதர சகோதரிகளின் கரடு முரடான நாகரீகத்தில் இல்லை..... நம்மில் வாசமாயிருக்கும் 'பொறுமையின்மையே' காரணம் என்பதை நாம் உணரத் தொடங்குவோம். ஆகவே நம்முடைய உண்மையான சத்துருவாகிய நம் சொந்த ஜீவனை எதிர்த்து சண்டையிடுவோமேயல்லாமல், நம்முடைய சகோதர சகோதரிகளிடம் ஒருபோதும் சண்டையிடமாட்டோம்!!

**4. இணக்கம்:** எச்சரிப்பையும், புத்திமதியையும் ஏற்றுக்கொள்ள முடியாதவன்

அல்லது புத்திமதியை கேட்கும் நிலைக்கு தன்னை அப்பாற்பட்டவன் என எண்ணுகிறவன் ஆகிய இவர்கள், மூப்பர்களாயிருந்தாலும் அல்லது வயது சென்றவர்களாயிருந்தாலும்..... அவர்கள் மூடர்கள் ( பிரசங்கி 4:13) . 'வயது சென்றவர்கள் ஞானமுள்ளவர்களாயிருப்பார்கள்' என்ற புறஜாதியாரின் எண்ணத்தையே இன்றும் நம் இந்திய தேசத்தில் அனேகர் கொண்டிருக்கிறார்கள். இந்த எண்ணம் ஒருவேளை பூமிக்குரிய காரியங்களுக்கு சரியாக இருக்கலாம்! ஆனால் நிச்சயமாய் ஆவிக்குரிய காரியங்களுக்கு இந்த எண்ணம் பொருத்தமானது அல்லவே அல்ல! தேவாலயத்திலுள்ள வயது சென்ற ஜனங்களைத் தன் அப்போஸ்தலர்களாய் இயேசு தெரிந்துகொள்ளாமல் இளம் வாலிபர்களையே தெரிந்துகொண்டார்!! சபையில் மூப்பராகவும், தேவபக்தியில் அதிக வளர்ச்சியும் பெற்ற 'இளம் மூப்பர்களின் புத்திமதியை ஏற்றுக் கொள்வதற்கு அந்த சபையிலுள்ள வயது முதிர்ந்தவர்கள் மிகவும் கஷ்டப்படுகறார்கள். ஏன் தெரியுமா? 'அவர்களின் பெருமையே' காரணம், அதுதான் உண்மை! ஆலோசனையை கேட்பதற்கு விருப்பம் கொண்டவர்கள் மாத்திரமே ஞானவான்களாய் மாறுகிறார்கள் என நீதிமொழிகள் 13:10 கூறுகிறது. ஒரு சபையிலுள்ள சகோதர சகோதரிகள் புத்திமதியையும், திருத்தப்படுவதையும் ஏற்றுக்கொள்ள மனப்பூர்வமான மனதுடையவர்களாய் இருந்தால், அந்த சபை நிச்சயமாய் 'மகிமையுள்ள சபையாய்' கட்டப்பட்டுவிடும்! ஞானமுள்ள மனிதன், தனக்கு உண்மையுடன் புத்திசொல்லுகிறவர்களை (வலுவாய் ஊக்கப்படுத்துகிறவர்களை) நேசித்து, அவர்களோடே ஐக்கியங்கொள்ள ஆர்வமாய் பிரயாசப்படுவான். தெய்வ பயத்தோடே ஒருவருக்கொருவர் கீழ்ப்படிந்திருங்கள் (அடங்கியிருங்கள்) ( எபேசியர் 5:21) என்பதே இந்த தூணின் மீது எழுதப்பட்ட வார்த்தைகளாகும்.

**5. இரக்கத்தாலும்** அதன் நற்க்கனிகளாலும் நிறைந்த தன்மை: அவ்வப்போது கொண்ட இரக்கத்தினால் அல்ல, கிறிஸ்துவின் மணவாட்டி எப்போதுமே இரக்கத்தினால் நிறைந்திருப்பாள்! யாரையும் நிபந்தனையின்றி, மகிழ்ச்சியுடன், மனப்பூர்வமாய் மன்னிப்பதற்கு கிறிஸ்துவின் மணவாட்டிக்கு கஷ்டமாய் இருப்பதே இல்லை! பிறரை ஒருபோதும் நியாயந்தீர்க்கவோ அல்லது ஆக்கினைக்கு உட்படுத்தவோ மாட்டாள்..... மாறாக, அவர்களிடம் தன்மணவாளன் இயேசுவைப்போல மனதுருக்கம் கொண்டிடவே நாடுவாள்! இந்த இரக்கத்தை அவள் வெறுமனே தன் மனதில் மாத்திரம் கொண்டிராமல், தன் செயல்களிலே இரக்கத்தின் நற்கனிகளை வழங்கிடுவாள்! ஜனங்களுக்கு, தன்னால் இயன்ற எல்லா வழியிலும் நன்மை செய்வாள்! தன்னால் இயன்ற எல்லா ஜனங்களுக்கும் நன்மை செய்வாள்! தன்னால் இயன்ற எல்லா நேரத்திலும் நன்மை செய்வாள்!

**6. அசையாதன்மை:** திவ்விய ஞானம் பெற்ற ஒரு சகோதரன், எல்லா நேர்மையற்ற தந்திரத்திலிருந்தும் விடுதலை பெற்றிருப்பான்! அவன் முழு இருதயம் கொண்டவனும், நேர்வழி கொண்டவனும், நெறிதவறா கண்ணுடை-

டயவனுமாய் இருந்து..... அலசடிபடும் சந்தேகங்களுக்கும் கோழையான தயக்கங்களுக்கும் முற்றிலும் விடுதலை பெற்றிருப்பான்! இவன் இருமனமுள்ளவனாயிராமல் தேவன் மீதுள்ள விசுவாசத்தில் வலிமைப் பெற்றிருப்பான். இவன் தன் சொந்த பெலவீனங்களையே பார்த்துக் கொண்டிராமல், தேவனுடைய வாக்குத்தத்தங்களையே தன் சிந்தையில் கொண்டிருப்பான்!! இவ்வாறு தேவனுடைய வாக்குத்தத்தங்களில் உறுதி கொண்ட சகோதரர்கள் மாத்திரமே, தங்கள் எல்லா அறிந்த பாவங்களிலேயும் ஜெயம் பெற்று வாழ்வது இந்த பூமியில் இப்போதே சாத்தியமானது என்பதை ருசித்திருப்பார்கள். இவ்வித உறுதிகொண்ட சகோதரர்களே நம்பிக்கைக்குப் பாத்திரவான்களாய் எப்போதும் இருப்பார்கள். சொன்ன வார்த்தையின்படி நடப்பார்கள் என்ற நம்பகம் இவர்களிடத்தில்தான் காணப்படும்!! இவர்களின் உறுதியை எந்த சத்துவமும் அசைத்துவிட முடியாது! இவர்கள் தங்கள் நெஞ்சில் பெற்ற விசுவாசத்தைவிட்டு விலகும்படி யாராலும் அவர்களை வளைத்துவிட முடியாது! அல்லது, வேறு யாதொரு விஷயத்திலும் அவர்களை 'ஒத்தவேஷம் தரித்திடச்' செய்வதும் ஒருவராலும் முடியாது!! ஆம், இவர்களே நிமிர்ந்தவர்களும் பனைபோன்று அசைவில்லாதும் இருப்பவர்கள்!!

**7. மாயமற்ற தன்மை:** மற்றவர்கள் வெளியே காண்பதைவிட தன் உள்ளே அதிகமான ஆவிக்குரிய களஞ்சியம் பெற்றவளாய் இருப்பாள், இந்த ஞான மணவாட்டி! அவளுடைய வெளிப்புற ஜீவியத்தை வைத்து மற்றவர்கள் கூறும் அபிப்பிராயத்தைக் காட்டிலும் அவளின் மறைவான அந்தரங்க ஜீவியம் அதிக புகழ்ச்சியுடையதாகவே இருக்கும்! 'ஆவிக்குரிய வேசியோ' இந்த மணவாட்டியின் குணாதிசயத்திற்கு நேர்-எதிராய் இருக்கிறாள். அவளின் ஆவிக்குரிய தன்மை என சொல்லப்படுவதெல்லாம், 'மனுஷர்களுடைய புகழ்ச்சியைப்' பெறுவதற்காக ஆடிய நாடகங்களேயாகும்! இந்த ஆவிக்குரிய-வேசி உண்மையில் பெற்றிருந்தது, மார்க்கவாதமே அல்லாமல் 'ஆவிக்குரிய தன்மைகள்' அல்லவே அல்ல! இந்த சீர்மிகு மணவாட்டியோ, தன் வெளிப்புற வார்த்தைகள் செயல்களைவிட தன் அந்தரங்க சிந்தைகளிலும், மன நோக்கங்களிலுமே அதிக விழிப்புடன் கவனமாய் இருக்கிறாள்! தன் அந்தரங்க ஜீவியத்திற்கு 'தேவ-னுடைய அங்கீகாரம்' வேண்டுமே என வாஞ்சித்து ஏங்குவாள்..... தன் வெளிப்புற ஜீவியத்திற்கு வரும் மனுஷருடைய அங்கீகாரத்தைக் குறித்தோ, துச்சமென மதித்து அதைக்குறித்து அக்கறையற்றிருப்பாள்!! ஞானத்தின் இந்த சோதனையில் தன்னை உண்மையாய் சோதித்தறிபவன் யாராயிருந்தாலும், அவன் மணவாட்டியில் பங்கு கொண்டவனா? அல்லது, ஆவிக்குரிய-வேசியில் பங்கு கொண்டவனா? என்பதை நிச்சயமாய் கண்டுகொள்ள முடியும்!!

ஞானத்தின் வித்து, கிறிஸ்துவின் மணவாட்டி இருதயத்தில் ஆழமாய் வேரூன்றியிருக்கிறபடியால், ஞானத்தின் மேற்கண்ட ஏழு குணாதிசயங்களும் வருடங்கள்தோறும் மென்மேலும் அவளுக்குள் வளர்ந்துகொண்டே இருக்கும். அவள் 'பூரணத்திற்கு' இன்னமும் தூரமாய் நின்றுகொண்டிருந்தாலும், அவளோ பூரணத்தை நோக்கி பிரகாசத்துடன் முன்னேறிச் சென்று கொண்டிருக்கிறாள்.



# What's wrong with Me?

## How Spurgeon Battled Depression

Since Charles Spurgeon's passing in 1892, he continues to profoundly influence the church and her leaders. Today, Spurgeon is one of the most read Christian authors, living or dead. Between his volumes of sermons, commentaries, devotionals, and books, many of God's people continue to feast on the fruit of Spurgeon's ministry.

"The prince of preachers," as he's been called, has been especially impactful to me. He has been a spiritual mentor who has often refreshed and challenged my soul. But I am not primarily drawn to his theological convictions or success. Rather, I am drawn to his sufferings.

## Sunken Prince

Despite the many blessings and victories Spurgeon experienced, he also suffered much throughout his life and ministry. One of the sufferings he experienced was "causeless depression." He once said in a sermon, "My spirits were sunken so low that I could weep by the hour like a child, and yet I knew not what I wept for" ("The Christian's Heaviness and Rejoicing"). Causeless depression plagued even the prince of

preachers, and he often felt ashamed that he was vulnerable to such despondency.

Countless Christians have wrestled with depression and, for many, it seems to strike without cause. Consider David: “Why are you cast down, O my soul, and why are you in turmoil within me?” (Psalm 42:5). In other words, “What is wrong with me? Why am I feeling like this?” If the king of Israel and the prince of preachers experienced this kind of depression, surely we are not immune. Even the most joyous Christians can know dark, inexplicable nights of depression.

How can we fight through these seasons? How did Spurgeon reconcile his struggle with depression with his view of a gracious God? Although depression is complex, and some of the remedies will vary from person to person, here are three truths that can be a light in the darkness.

## Giver of the Cup

First, Spurgeon saw his depression as ordained by God, for God’s glory and his own sanctification. Spurgeon pressed through his depression with an unwavering conviction that God was sovereign in all that happened to him. He never once believed that his sufferings were by accident or an obstacle.

Spurgeon once said, “It would be a very sharp and trying experience for me to think that I have an affliction which God never sent me, that the bitter cup was never filled by his hand, that my trials were never measured out by him, nor sent to me by his arrangement of their weight and quantity” (“The Anguish and Agonies of Charles Spurgeon”). Jesus also knew who gave him his bitter cup (Matthew 26:39). But as painful as the cross was, it reconciled countless souls to God. God’s purposes and plans always consist of suffering.

## Afflicted for Comfort

Second, Spurgeon considered the effective ministry that seasons of depression birth. How much more could God use us to comfort one afflicted soul after we have gone into the depths a hundred times ourselves? “Blessed be the God and Father of our Lord Jesus Christ, the Father of mercies and God of all

comfort, who comforts us in all our affliction, so that we may be able to comfort those who are in any affliction" (2 Corinthians 1:3–4).

Maybe you are currently walking through the valley of despair, and depression's dark shadow has dimmed your hope. In these moments, it is easy to believe the lie that God has no use for you in blessing others. If you believe this lie, isolation is sure to follow. But these feelings of uselessness and loneliness are right where the enemy wants us. Why? To prevent us from ministering and being ministered to. A rich ministry flows from your own well of suffering. God will often use those who are familiar with depression's landscape to help others navigate their way through it.

## Oxygen to the Body

Third, while Spurgeon used theological weapons to combat his depression, he also used practical means through rest and nature. Most of us spend all our hours and days doing and neglect our being. Spurgeon said, "In the long run, we will do more by sometimes doing less" (Lectures to My Students, 128). There is great wisdom in giving our bodies and minds rest. Sometimes, a day of recharging, and restful activity, will make a deep difference.

Spurgeon also used nature as a remedy for the depths of depression. Spurgeon counsels that we should "breathe country air and let the beauty of nature do its appointed work. A mouthful of sea air, or a stiff walk in the wind's face would not give grace to the soul, but it would yield oxygen to the body, which is next best" (Lectures to My Students, 126). In other words, sometimes we need to take a walk and enjoy creation.

The fruit of Spurgeon's life shows us that depression is not enough to break the bruised reed, or quench the faintly burning wick (Isaiah 42:3). By God's grace, we do not need to yield to the despair that depression brings. Rather, we can fully yield to the sovereignty, grace, and goodness of God in the midst of it.

# Seven Things to Pray for Your Children

Some years back a good friend shared with me seven Scripture texts that he and his wife prayed for their two daughters from the time they were infants. The girls are now grown. And it's beautiful to see how God has answered and still is answering the faithful, specific prayers of faith-filled parents in the lives of these young, godly women.

I have frequently used these prayers when praying for my own children. And I commend them to you.But, of course, prayers are not magic spells. It's not a matter of just saying the right things and our children will be blessed with success.

Some parents earnestly pray and their children become gifted leaders or scholars or musicians or athletes. Others earnestly pray and their children develop a serious disability or disease or wander through a prodigal wilderness or just struggle more than others socially or aca-



demically or athletically. And the truth is, God is answering all these parents' prayers, but for very different purposes.
That's why Scriptures like John 9:1–3 are in the Bible. We must not too quickly assess God's purposes because they can be the opposite of our perceptions. God measures success differently than we do, which is why he often answers our prayers in ways we don't expect.

"Jesus promises us that if we ask, seek, and knock, the Father will give us good in return."
So, pray for your children. Jesus promises us that if we ask, seek, and knock, the Father will give us good in return (Luke 11:9–13), even if the good isn't apparent for forty years. And because Jesus regularly asked those who came to him, "What do you want me to do for you?" (Mark 10:51), we know that he wants us to be specific with our requests.
So, here are seven helpful, specific things to pray for your children.

**1. That Jesus will call them and no one will hinder them from coming.**

Then children were brought to him that he might lay his hands on them and pray. The disciples rebuked the people, but Jesus said, "Let the little children come to me and do not hinder them, for to such belongs the kingdom of heaven." And he laid his hands on them and went away. (Matthew 19:13–15)

**2. That they will respond in faith to Jesus's faithful, persistent call.**

The Lord is not slow to fulfill his promise as some count slowness, but is patient toward you, not wishing that any should perish, but that all should reach repentance. (2 Peter 3:9)

**3. That they will experience sanctification through the transforming work of the Holy**

**Spirit and will increasingly desire to fulfill the greatest commandments.**

And he said to him, "You shall love the Lord your God with all your heart and with all your soul and with all your mind. This is the great and first commandment. And a second is like it: You shall love your neighbor as yourself." (Matthew 22:37–39)

**4. That they will not be unequally yoked in intimate relationships, especially marriage.**

Do not be unequally yoked with unbelievers. For what partnership has righteousness with lawlessness? Or what fellowship has light with darkness? (2 Corinthians 6:14)

**5. That their thoughts will be pure.**

Finally, brothers, whatever is true, whatever is honorable, whatever is just, whatever is pure, whatever is lovely, whatever is commendable, if there is any excellence, if there is anything worthy of praise, think about these things. (Philippians 4:8)

**6. That their hearts will be stirred to give generously to the Lord's work.**

All the men and women, the people of Israel, whose heart moved them to bring anything for the work that the Lord had commanded by Moses to be done brought it as a freewill offering to the Lord. (Exodus 35:29)

**7. That when the time is right, they will GO!**

And Jesus came and said to them, "All authority in heaven and on earth has been given to me. Go therefore and make disciples of all nations, baptizing them in the name of the Father and of the Son and of the Holy Spirit, teaching them to observe all that I have commanded you. And behold, I am with you always, to the end of the age." (Matthew 28:18–20)



# வாழ வைப்பவர்!

## சகோதரி ஜெயானி இலங்கேஸ்வரன்.

கர்த்தருடைய பரிசுத்த நாமத்தில் புத்தாண்டு வாழ்த்துக்கள். கடந்த வருடம் முழுவதும், தாயின் வயிற்றில் இருந்து புறப்பட்ட நாள் முதல் கொண்டு இதுவரை நடத்தினவர் இந்த வருடமும் தன் கிருபையால் நடத்துவார்.

நம்முடைய தேவன் நம்மை நடத்தும் தேவனாவார். அவர் நடத்துகின்றவர் மாத்திரமல்ல, வாழவைக்கும் தேவனுமாவார். உங்கள் துக்கங்களை மாற்றி, கண்ணீரைத் துடைத்து, கவலைகளை ஆறுதலாக்கி உங்களை நடத்த அவர் வல்லவராய் இருக்கின்றார். கர்த்தரை நம்பிச் சார்ந்து கொள்ளுங்கள். அப்பொழுது அவர் வாழ வைப்பார் என்பதற்கு வேதமும், தற்போது சபையில் நிறைந்து வழியும் மக்களுமே சாட்சி.

விவிலியத்தில் ரூத் என்னும் ஒரு புத்தகம் உண்டு. இந்தப் புத்தகம் நம்பிக்கையிழந்தவர்களை, நலிந்தவர்களை, ஆதரவற்றிருப்பவர்களை, அநாதரவானவர்களை தேற்றி நம்பிக்கைத் தரும் ஒரு புத்தகமாகும். இந்தப் புத்தகத்தில் ரூத் என்றழைக்கப்படும் இந்தப் பெண் ஒரு அந்நிய ஜாதியான ஸ்திரி. அவள் யூதகுலத்தாள் அல்ல, அந்நிய தெய்வத்தை வழிபடும் குடும்பத்தைச் சேர்ந்தவள். ஆனால் யூதகுலத்தொருவனைத் திருமணம் செய்தாள். அவள் மாமியின் பெயர் நகோமி. அவளின் மனக்கோட்டையில் மண் விழுந்தது போல அவள் கணவன் மரித்துப் போனான். இப்பொ

ழுது தன் மாமியின் நிழலில் வசிக்க வேண்டிய கட்டாயம் அவளுக்கு (ரூத் 1:1-5). ஒருவேளை இதனை வாசிக்கும்போது நீங்களும் ரூத்தைப் போல அங்கலாய்த்துக் கொண்டிருக்கலாம். இதோ உங்களுக்கோர் நற்செய்தி!. ரூத்தை வாழவைத்தவர் உங்களையும் வாழ வைக்க வல்லர். அவரை பற்றிக் கொள்ளுங்கள்.

ரூத் தன் மாமியாகிய நகோமியோடு எருசலேமுக்கு வந்தாள். தன் சொந்த ஊரை விட்டு, நாட்டை விட்டு உறவை விட்டு அவளறியாத தேசத்திற்குள் தான் தற்போது அறிந்துகொண்ட தேவனைப் பற்றிக் கொண்டு வந்தாள். அந்தத் தேவன் அவளைக் கைவிடவேயில்லை. அவர் அவளை நடத்தினார்.

ரூத்தின் பாதையில் இரண்டு நடத்தல்கள் இருந்தன. 1. அவள் தானாகவே தீர்மானித்த பாதைகள். 2. தேவன் அவள் வாழ்க்கையில் தீர்மானித்த பாதைகள். **கர்த்தாவே, உம்முடைய வழிகளை எனக்குத் தெரிவியும், உம்முடைய பாதைகளை எனக்குப் போதித்தருளும்.**(சங் 25:4) என்று சங்கீதப் புத்தகத்தில் வாசிக்கின்றோம். ரூத் தீர்மானித்த வழியில் நல்ல வாழ்க்கையிருந்தது போலத் தான் ஆரம்பித்தது. ஆனால் அந்த வழியில் மரணமும் வேதனையும் நிரம்பியிருந்ததை அவளால் அறிய முடியவில்லை. கண்ணீரும், ஏக்கமுமே உணவாயிருந்த போது அவள் கர்த்தரின் கரத்தைப் பிடித்துக் கொண்ட போது தான் தேவன் உணர்த்தி நிற்கும் பாதைகளை அவள் கண்கள் கண்டன. **உன் வழிகளிலெல்லாம் அவரை நினைத்துக்கொள், அப்பொழுது அவர் உன் பாதைகளைச் செவ்வைப்படுத்துவார்**(நீதி 3:6).

அவள் எருசலேமுக்கு வந்த போது, நகோமியின் கணவனின் தூரத்து உறவினனான போவாஸ் என்பவனுடைய வயலுக்கு அவள் தற்செயலாக கதிர் பொறுக்கச் சென்றாள். தேவன் தன் மேல் அன்பு கூருகிறவர்களுக்கு செய்யும் அதிசயம் இது. தற்செயலாய் இருப்பது போல, தன்னுடைய பிள்ளைக்கான பாதையைத் திறந்து விடுகின்றார். வயலில் கதிர் பொறுக்க வந்தவளை அந்த வயலுக்கே சொந்தக்காறியாக்குவதே தேவனின் திட்டம். வேலைக்காறியாய் வந்தவள் போவாஸின் கண்களில் தயவு பெற்றாள். இந்தச் செல்வந்தனின் கண்களில் பெற்ற தயவு அவளுக்கு பாதுகாப்பை

**தேவனாகிய கர்த்தர் மேல் நம்பிக்கை வைப்ப வர்களுக்கு தற்செயல் என்பது கிடையாது.. எல்லாமே தேவ திட்டமே.**




யும், அன்றாட ஆகாரத்திற்கான ஆதரவையும் ஆரம்பத்தில் கொண்டு வந்தது (ரூத் 2:1-11). மீட்பர் இயேசுவின் நன்மையை அனுபவிக்க வேண்டுமெனில் ஆவியானவரின் வழிநடத்தலுக்கு ஒப்புக் கொடுக்க வேண்டியது மிக்க அவசியம். ரூத் ஆவியானவரின் நடத்தலுக்கு தன்னைத் தானே ஒப்படைத்தினால் போவாசின் வயலைக் கண்டடைந்தாள்.

என் அன்புச் சகோதரியே, நீ எங்கேயலைந்து கொண்டிருக்கின்றாய்?. நீ போகவேண்டியது போவாசின் வயலுக்கே. நீயோ வேறெங்கேயோ தேடிக் கொண்டிருக்கின்றாய். **கர்த்தருக்குப் பயந்து, அவர் வழிகளில் நடக்கிறவன் எவனோ, அவன் பாக்கியவான்** (சங் 128:1). உன்னை அபாக்கியவதி என்பவர்கள் அதிகம். ஆனால் உன்னையும் என்னையும் பாக்கியவதியாய் மாற்றுகிறவர் இயேசுவே. சாபங்களை ஆசீர்வாதங்களாயும், கண்ணீரையும், சாம்பலையும் களிப்பாகவும், நடனமாகவும் மாற்றவே அவர் சிலுவை சுமந்தார். அவர் நமக்கான கிரயத்தை கொடுத்ததினால் நாம் அவருடைய பிள்ளைகளாக மாறுகின்





தாவீதின்

# சங்கீதங்கள்

ஆறுமொழிகள்...

தமிழ்,சிங்களம்,ஹிந்தி,மலையாளம்

ஆங்கிலம் மற்றும் தெலுங்கு

ஆகிய ஆறு மொழிகளில்

கிடைக்கின்றது.

உங்கள் வீடுகளுக்கு கொண்டு வந்து

தரப்படும்..அழையுங்கள்

சகோ.பென்ஜமின்

**905 614 0209**

றோம். **நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் பிதாவாகிய தேவனுக்கு ஸ்தோத்திரம். அவர் கிறிஸ்துவுக்குள் உன்னதங்களில் ஆவிக்குரிய சகல ஆசீர்வாதத்தினாலும் நம்மை ஆசீர்வதித்திருக்கிறார்** என்று நாம் எபேசியர் 1:3ல் வாசிக்கின்றோம். உங்களுடைய ஆசீர்வாதமும், அற்புதமும் அவருக்குள் மறைந்திருக்கின்றது.

காலம் கனிந்த போது காலடியில் படுத்திருந்த ஸ்திரிக்காக போவாஸ் தன் உறவுகளாடு பேசினார். போவாசின் சுதந்திரவாளி என்ற மேலாண்மையினால் இந்த தள்ளப்பட்ட மோபாவிய ஸ்திரி யூதக் குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டாள். அவளின் சாபங்கள் ஆசீர்வாதமாகின. சபித்தவர்கள் வணங்கினார்கள், கேலி பேசினவர்கள் வாயடைத்துப் போனார்கள். இஸ்ரவேலின் காணியாட்சிக்கு புறம்பானவளாய், 10ம் தலைமுறைக்கும் தள்ளப்பட்டவள் வயிற்றில் நம்முடைய இரட்சகர் இயேசுவழிப் பாட்டனாக ஓபேத் அவதரித்தார். தள்ளப்பட்ட ஸ்திரி இன்று வரை புகழப்படுகின்றாள், போற்றப்படுகின்றாள், நினைவு கூரப்படுகின்றாள்.

2019ல் நீங்கள் வாழ்வடைய வேண்டும் என்பதே தேவ சித்தம். உங்களை வாழ்வடைய வைக்க வல்ல இயேசுவிடம் வருவீர்களா? உங்கள் உள்ளத்தைத் தருவீர்களா?



**28 YEARS MINISTERING IN MISSISSAUGA...**

## PRAISE TABERNACLE

**5155,Spetrum way, Unit 7**
**Mississagua ON L4W 5A1**

| | |
|---|---|
| ஞாயிறு- காலை<br>9:15 மணி - ஆங்கில ஆராதனை<br>9:30 மணி - ஓய்வுநாள் பாடசாலை<br>10:30 மணி - தமிழ், ஆங்கில ஆரா தனை<br>11:15 மணி - வாலிபர் ஆராதனை<br>மாலை 6:00 மணி<br>தமிழ் ஆராதனை | SUNDAY- Morning<br>**9:15 - 1st service in English**<br>**9:30 - Sunday school**<br>**10:30 - 2nd service - Tamil/English**<br>**11:15- Youth meeting**<br>**6:00 PM- 3rd service in Tamil** |
| கிழமை நாட்களில்..<br>செவ்வாய், புதன்- வீட்டுக் கூட் டங்கள் மாலை 7:30 மணி<br>புதன்கிழமை காலை 10:30 மணி- விண்ணப்ப ஜெபம்<br>வியாழக்கிழமை மாலை 7:30 வேதப்படிப்பு, ஜெபம் | Weekdays..<br>**Tuesday & wednesday cell meeting @ 7:30 PM**<br>**Wednesday 10:30 AM- Intercessory Prayer**<br>**Thursday 7:30 PM- Bible study and prayer** |
| மாதந்தோறும்...<br>1ம் திகதி காலை 5:00 மணி<br>வாக்குத்தத்த ஆராதனை<br>1வது சனிக்கிழமை 9:30 மணி<br>உபவாசக் கூட்டம்<br>2வது சனிக்கிழமை 10:00 மணி<br>பெண்கள் கூட்டம்<br>3வது வெள்ளிக்கிழமை இரவு 10:00<br>விழிப்பிரவு ஜெபம் | **Monthly**<br>**1st day of the month @ 5:00 Am- Promise meeting**<br>**1st Saturday of the month @9:30 AM Fasting prayer**<br>**2nd Saturday of the month @ 10:00 AM Women's meeting**<br>**3rd Friday of the month Vigilant prayer** |
| இலங்கையில் எமது சபை:<br>துதியின் கூடாரம்<br>2ம் கட்டை<br>மடுறோட், மன்னார். இலங்கை<br>போதகர் அன்பழகன் பிலிப்பு<br>தொலைபேசி எண்:<br>+94 767 97 7963 | **Our Sri Lanka church**<br>**Priase Tabernacle**<br>**2end Kaadai**<br>**Madu Road**<br>**Mannar, Sri lanka.**<br>**Pastor Anbu Philip**<br>**Phone :**<br>**+ 94 767 97 7963** |

